விவசாயிகள் மார்க்கெட்டில் வண்டியை ஓட்டிக்கொண்டு வந்து கேட்ட விலைக்கு போட்டுவிட்டு போய்விட்டார்கள். 200-க்கு கணக்கு போட்டுக்கொண்டு எடுத்துக்கொண்டுபோனால் ரூ. 150 தான் கைக்குக் கிடைக்கிறது. எங்களைப் போன்றவர்கள் எப்படி யாவது இருக்கலாம். இரண்டு ஏக்கர், மூன்று ஏக்கர் உள்ளவர் களையாவது கவனிக்க வேண்டும். கசக்காலில் பயிர் பண்ணு கிறவர்களுக்கு எல்லாம் அந்தக் காலத்தில் அதிகத் தீர்வை. இந்த நிலம் இருக்கிறதே, அதற்கு அதிகத் தீர்வை என்பது அந்தக் காலத்திலே, 2 போகம், 3 போகம் கசக்காலில் பாய்ச்சலில் பயிர் பண்ணினார்கள். இப்பொழுது நீர்மட்டம் குறைந்து விட்டதால், அந்த கசக்கால் நிலங்கள் புஞ்சை நிலங்களாக காட்சியளிக்கின்றன. இப்பொழுது அதை செடில்மெண்டு பண்ணி ஸ்டாண்டர்டு ஏகர் நிர்ணயிக்க வேண்டுமென்றும், சென்ற உச்சவரம்பு சட்டம் வந்த போது சொன்னேன். அது அவசியம் செய்ய வேண்டியதுதான் என்று மந்திரி மாணிக்கவேலர் சொன்னார். இப்பொழுது அவர் இல்லை. டில்லிக்குப் போய் விட்டார். தாங்களாவது அதைப் பரி சீலனை செய்து இப்பொழுதாவது கசக்காலில் தண்ணீர் சரியாக இருக்கிறதா, அல்லது இல்லையா என்பதைப் பார்த்துத் தீர்வை போட வழிவகை செய்ய வேண்டும். புஞ்சை நிலத்திலே எல்லாம் பம்பு செட் போட்டுவைத்திருக்கிறார்கள். அந்த இடத்திலே எல்லாம் இந்த வரி போட்டால் என்னவாகும்? அதற்கு மறுபடியும் வரி போடக் கூடாது. செய்கிறபோது எல்லாவற்றையும் பார்த்துச் செய்யுங்கள். நீங்கள் உத்திரவு போடுகின்றபோது எந்தெந்த இடத் தில் கசங்காலில் பாய்ச்சல் அடைப்பட்டு கிடைக்கிறதோ அங்கே எல்லாம் என்ன பண்ணவேண்டும் என்று பார்த்துச் சொல்லுங்கள் இதற்கு வருஷா வருஷம் நிலத்தீர்வை வஜா மனுவைப் போட்டு வஜா வாங்கவேண்டும். இதே மாதிரி ரெவின்யூ டிபார்ட் மெண்டில் ரிகார்டு இருக்கிறது. ரிகார்டைக் கொடுக்க மாட்டார் களா நீங்கள் கேட்டால். ஆகையினால் இதிலே சிக்கல் இருக் கிறது. நமக்குச் சண்டை வந்திருக்கிறது. பணம் வேண்டியது தான். வரி போட்டு வாங்கவேண்டியதுதான். வாங்குவதையும் நல்ல முறையில் வாங்குவது நல்லது. இந்த மாதிரி வருஷா வருஷம் வரி போட்டுக்கொண்டே போனால் என்ன பண்ணுவது? ஆகையினால் பொதுவாக இந்தக் காலத்தில் இதைக் கொண்டு வரவே வேண்டியதில்லை. ஏதோ கொண்டுவந்துவிட்டார்கள். கொண்டுவந்ததை ஏதோ பக்குவமாகப் பார்த்துச் செய்யுங்கள். ஒரே காலத்தில் நில வரியையும் தண்ணீர் வரியையும் போடாதீர் கள். இரண்டையும் ஒரே நேரத்தில் கொண்டுவந்தால் ஆபத்தாகி விடும். இப்பொழுது நீங்கள் ஓட்டுக்குப் போகப் போவதில்லை; 1967-ல் தானே என்று இருந்து விடக்கூடாது. ஆகையினால் தயவு செய்து எல்லாவற்றையும் கருதி, தண்ணீர் வரியே வேண்டாம். ஒன்றை எடுத்துவிடவேண்டும். ஒன்றை மட்டும் வைத்துக் கொள்ளவேண்டும் என்று சொல்லிக்கொண்டு, எனக்கு இவ்வளவு நேரம் பேச அனுமதி கொடுத்த தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்து முடித்துக் கொள்ளுகிறேன்.

28th February 1963]

SRI M. SESHACHARIAR: Mr. Chairman, Sir, there is only one point which I would like to mention in regard to this matter. The hon. Member Sri K. Balasubramanya Ayyar was mentioning about the inequity of the new legislation in regard to the amendment that it sought to make in the original Irrigation Cess Act. We have got to understand the scope of the Irrigation Cess Act, why it was passed, when it was passed and so on. It was passed at a time when all sorts of improvements had been made and when people were trying to misuse the water. It was only then that that legislation was passed. It was not for the people who took water from the accustomed source of supply. If it is an accustomed source of supply for wet land, no such levy was there and the Irrigation Cess Act would not apply. If it is irregular irrigation, if it is for manavari crop, if it is for dry land, only then that Act would apply. To say that we are changing for something for taking water from the accustomed source of supply and all that is only misleading the whole thing.

The other contention of the hon. Member was that it was only a fee and cannot be a tax. Even that is not correct. Our Courts have decided that. I am sure the Hon. the Leader of the House would make mention of it later when he replies to the discussion. It is a charge on the land. Once it is a charge on the land, what else can it be except a tax? Therefore, to say that it is only a fee and the new legislation affects the foundamental principles . . .

SRI K. BALASUBRAMANYA AYYAR: Mr. Chairman, Sir, I would request to be permitted to interrupt the hon. Member to explain myself. It is different as a charge. As fee, only the provisions of the Revenue Recovery Act are attracted specially by the Section. That is what we must remember, because it is a fee, and, therefore, they are anxious to give power to recover it like any other fee under the provisions of the Revenue Recovery Act. 4-10 p.m.

SRI M. SESHACHARIAR: The hon. Member cannot say that it is not a charge on the land. The cess that is levied is a charge on the land and, therefore, it becomes a tax. The whole matter has been studied by our High Court and a decision given. Therefore, there is no purpose in saying that it is not a tax but something else. It has been decided once for all that it is a tax. As I said it should be remembered that the water tax is levied when water is taken for a wet land from a source not intended to supply water to that wet land. Then if there is irregular irrigation, the cess is levied. If a manavari crop is raised with irrigated water from a Government source, then again the cess is levied. If dry land takes water—it is not applicable to the wet lands—then the cess is levied.

Of course, Sir, I can understand my learned Friend when he said that the measure could have been reserved for some other time. But when we are faced with this emergency and ther

28th February 1963] [Sri M. Seshachariar]

SRI K. BALASUBRAMANYA AYYAR : Therefore Government probably want to take advantage of it to increase their income, there is justification also for their bringing this Bill forward. But there is one thing to which I should like to draw the attention of the Government, which I hope they would take note of and see, if possible, that the Panchayat Unions are restrained to some extent from enhanciing the fees to any extent they like. What I find is this. In some Panchayat Unions, in North Arcot as also in my district, the additional fee or cess has been raised to 60 per cent. In certain cases it has gone up even to 90 per cent and in one Panchayat to 100 per cent. I believe Government have powers under section 117 or 118 of the Act to prescribe limits. If the Government prescribe a maximum rate, then alone will the Panchayat Unions be restrained from collecting such high surcharges. There is another provision also in the Act which my hon. and learned Friend did not refer to. It is section 119. I think, under which the Unions can collect certain levies for certain specified purposes such as kudimaramath or other developmental purposes. Therefore, the amount collected by the Unions would be not less than twice the amount that is paid as land revenue. It may be much more than that in certain places.

SRI M. SESHACHARIAR : In places where they are now paying one rupee as land revenue they would have to pay Rs. 2 as surcharge and in certain places more. I am not trying to hide anything. I am only stating facts. What I want to mention is this. The Government should pass some rule by which the Unions should be restrained from enhancing these charges whenever there is difficulty for them. Last year there was not much of a difficulty. This year they find they are in deficit everywhere and unfortunately, the slab system has been introduced everywhere and that has not been very helpful. Therefore, they are trying to enhance the surcharge wherever possible. In this connection, the Government have also got to bear in mind the fact that they have to pay a matching grant on the collections so made by the Panchayat Unions. Therefore, the Government would do well to pass some rule by which the maximum that could be levied by the Unions are prescribed. That is all I would like to suggest to the Government in regard to this matter. Otherwise, I am prepared to support this measure.

* திரு. ஆர். வெங்கடாசலம் : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, நிலத்திற்கான கூடுதல் தீர்வை, தண்ணீர் தீர்வையைப் பொறுத்து அமைந்த பொறுக்குக் கமிட்டிக்கு வருகிற நேரத்தில் அதில் நான் ஒரு அங்கத்தினராக இருந்தும் கூட, சேர்க்கப்பட்ட அங்கத்தினராக இருந்த காரணத்தினால், என்னுடைய திருத்தங்களையோ மற்ற கருத்துக்களையோ அங்கு அதிகமாக எடுத்துக்கூற முடியாத காரணத்தால், இங்கு அதுபற்றிக் கூற விரும்புகிறேன். இந்த மசோதா இந்த நேரத்தில் கொண்டுவரப்படுவது சரியில்லை என்பதைப் பற்றி இரண்டொரு வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். தேசிய நெருக்கடி ஏற்பட்டிருக்கிற இந்த நேரத்தில் உற்பத்தியைப்

28th February 1963] *[திரு. ஆர். வெங்கடாசலம்]*

பெருக்கவேண்டுமென்ற மிக முக்கியமான குறிக்கோளைக் கொண்டிருக்கிற அரசாங்கமானது உற்பத்தியைப் பாதிக்கிற அளவில் நிலத்தில் கூடுதல் வரியையும் தண்ணீர் தீர்வையும் விதிப்பது பொருந்தாது என்று கூற விரும்புகிறேன். ஏற்கனவே மதிப்பிற்குரிய இந்த சபை அங்கத்தினர்கள் பேசும்போது சொன்னது போல, பல வழிகளில் வரி செலுத்தமுடியாமல் இரண்டு, மூன்று ஐந்து ஏக்கர்கள் என்று நிலங்களை வைத்துக்கொண்டிருக்கிற சிறிய சொந்தக்காரர்கள் அவதிப்பட்டு வருவதை அடிக்கடி சுற்றுப்பயணம் செய்யும் அமைச்சர்கள் நன்ருக அறிவார்கள். அவர்களிடத்தில் சர்க்கார் அதிகாரிகள் வற்புறுத்துவதன் காரணமாக பல கிராம விவசாயிகள் அமைச்சர் அவர்களிடம் நேரில் சொல்லியும் மகஜர் கொடுத்தும் இருக்கிருர்கள். அப்படியிருக்கிற விவசாயிகளின்மேல் இந்த மசோதாவின் மூலம் கூடுதல் தீர்வை, தண்ணீர் தீர்வை, போடுவது மிகுந்த சிரமத்தைத்தான் கொடுக்கும் என்று கூற விரும்புகிறேன. மதிப்பிற்குரிய அங்கத்தினர் பாலசுப்ரமணிய அய்யர் அவர்கள் கூறியதுபோல, பஞ்சாயத்து யூனியன் லோகல் செஸ் சர்சார்ஜ் வேறு விதிக்கிருர்கள். அதுவும் நிலத்தின் வரி மீதுதான் விதிக்கப்படுகிறது. உத்தேசித்த கூடுதல் வரியின் மீது விதிக்கப்படுகிறது அல்ல என்ருலும்கூட அவர்கள் எந்த அளவுக்கு விதிக்கவேண்டுமென்ற நிர்ணயம் பஞ்சாயத்து யூனியன்களுக்குக் கிடையாது. மதிப்பிற்குரிய ஐயர் அவர்கள் கூறியது போல, ஒரு இடத்தில் 20 சதவிகிதம், மற்ருெரு இடத்தில் 100 சதவிகிதம் என்று விதித்திருக்கிருர்கள். ஒரு பஞ்சாயத்து யூனியனுக்கும் மற்ருேர் பஞ்சாயத்து யூனியனுக்கும் இப்படிப்பட்ட வித்தியாசம் இருப்பதனுல், ஒரு பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த விவசாயிகளுக்கு மற்ற யூனியனைச் சேர்ந்த விவசாயிகள் மீது பொருமை ஏற்படும் அளவில், வருத்தப்படும் அளவில், சர்க்கார் அதிகாரம் கொடுத்திருக்கிறது. அதன் மூலமாக ஒரு வேற்றுமை உண்டாவதாகத்தான் இருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் அதிகமாக வரி விதிப்பதால், அவர்களுக்கு மேட்சிங் கிராண்ட் அதிகமாக சர்க்கார் கொடுக்கவேண்டியிருக்கிறது. ஆகையால் இந்த நேரத்தில் பஞ்சாயத்து யூனியன்கள் லோகல் செஸ் சர்சார்ஜ் எந்த அளவுக்கு அதிகமாக விதிக்கலாம் என்று விதி அமைக்க சர்க்கார் முயற்சிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதன் மூலம் சர்க்கார் எதிர்பார்க்கிற வருமானம் ஒரு கோடி ரூபாய் என்று அமைச்சர் அவர்கள் கூறினுர்கள். இந்த ஒரு கோடி ரூபாய்க்கு இந்த வரியை விதித்து இதன்மூலம் ஏழை விவசாயிகளைப் பாதிக்காத அளவுக்கு மீண்டும் இதை புனராலோசனை செய்யவேண்டுமென்று மன்ருடிக் கேட்டுக் கொள்கிறேன். இந்த ரூபாயை வேறு வழிகளில் சம்பாதித்துக்கொள்ள வசதி இருக்கிற காரணத்தால், இந்த நிலத்தின் மீது உற்பத்தியைப் பாதிக்கிற அளவுக்கு விதிக்கப்படும் வரிகளை ஒத்திவைக்கவேண்டுமென்றும் மீண்டும் இதைப் புனராலோசனை செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு இங்கு பேச சந்தர்ப்பம் அளித்த தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* திரு. க. அன்பழகன் : சட்டமன்றத் தலைவர் அவர்களே, நிலத் தீர்வையை உயர்த்துவதற்கும் நீர் மீது விதிக்கப்பட்ட வரியைக் கூடுதலாக்குவதற்கும் இப்போது வந்திருக்கின்ற இந்த மசோதாவை அரசாங்கத்தினுடைய வருமானத்தைப் பெருக்க வேண்டுமென்பதற்காக கொண்டுவந்திருப்பதாக அமைச்சர் அவர்கள் காரணம் கூறினாலும், இதனால் ஏற்படுகின்ற பாதகத்தைக் கருதி இதை வரவேற்க முடியாத நிலையில் நான் இருக்கிறேன். பொதுவாகவே அரசாங்கம் வரி விதிப்பதன் கொள்கையை எண்ணிப் பார்க்கிற போது, அந்த வரி யாரிடத்தில் வசூலிக்கப்படுகிறதோ அவர்களுக்கு இதனால் எந்த இடையூறும் இல்லையா என்பதை சிந்தித்து உணர்ந்து இருக்க வேண்டும். இந்த வரியைப் பொறுத்த வரையில், பொதுவான வரியாகவே அமைந்திருக்கிறது. தக்கவர்கள் மட்டும் கட்டக்கூடிய வரியாக அமையாமல், எல்லோரும் செலுத்தவேண்டிய வரியாக உள்ளது. விற்பனை வரி எப்படி பொது மக்கள் அனைவரையும் பாதிப்பதாக அமைந்திருக்கிறதோ, அது போன்றே அமைந்திருக்கிறது. இந்த வரியின் நோக்கம் இதற்கு முன்னால் அரசாங்கத்தால் கொள்கையளவில் கூறப்பட்டது போன்று, குறைந்த நிலம் உள்ளவர்களுக்கு இந்த வரி விதிப்பு பாதகமாக இருக்காது என்ற உறுதியை அமைச்சர் அவர்கள் அளித்தால், அதற்கு வேண்டிய விதிகள் வகுக்கப்படுமென்று கூறினால், இதை நான் வரவேற்க முடியும். நில உடமை உச்ச வரம்பு சட்டம் கொண்டுவரப்பட்ட நேரத்தில், நிலத்தில் குறைந்த வருமானம் பெற்றுக்கொண்டிருக்கிறவர்களுக்கு எவ்விதமான பாதகமும் ஏற்படாமல் இருக்கவேண்டுமென்று கூறப்பட்டது. விவசாய வருமான வரி போடப்பட்ட போதிலும், குறைந்த வருமானம் உள்ளவர்கள் செலுத்தவேண்டுமென்றில்லாமல் அதிகமான நிலம் உள்ளவர்களே செலுத்தவேண்டுமென்று ஒப்புக்கொள்ளப்பட்டு இருக்கிறது. அதுபோன்று குறைந்த நிலம் உள்ளவர்கள் இந்த வரி மூலம் பாதிக்கப்படாமல் இருக்கவேண்டுமென்று இந்த மன்றத்
4–20 p.m. தில் பலராலும் சொல்லப்படுகிறது.

புதிய வரி நீரின் வரி மீதும் கூடுதலாக விதிப்பதன் மூலம் குறைந்த நிலத்தின் மீதும் நீரின் மீதும் விதிக்கப்படும் போது இந்தப் புதிய வரி குறைந்த நிலம் உள்ளவர்களைப் பாதிக்காமல் இருக்குமா என்பதை அரசாங்கம் ஆழ்ந்து சிந்தித்திருக்கவேண்டும். ஐந்து ஏக்கருக்கு மேல் அதிக நிலம் உள்ளவர்கள் குறைவாகையால் இதன் மூலமாக அதிகமாக வரி பெற முடியாது என்று அரசாங்கம் சொன்னால், அதன்மூலம் கிடைக்கவேண்டிய அளவு வருமானம் எங்களுக்குக் கிடைக்கவில்லை என்று அரசாங்கம் கூறினாலும் குறைந்த நிலம் உள்ளவர்களில் ஒரு ஏக்கர் இரண்டு ஏக்கர் மூன்று ஏக்கருக்கும் குறைவான நிலம் உள்ளவர்கள் கூட இந்த நாட்டில் ஏராளமாக இருக்கிறார்கள் என்பதால். விவசாயம் கட்டி வராத நிலையில், குடும்பம் நடத்தக்கூட முடியாத நிலையில் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறவர்கள் மட்டுமாவது இந்த வரியினால் தாக்கப்படாமல் இருப்பதற்கு அரசாங்கம் வழி செய்யவேண்டும். எதிர்க்கட்சித் துணைத்தலைவர் அவர்கள் சொல்லியதை ஆதரித்து

28th February 1963] [திரு. க. அன்பழகன்]

நானும் தெரிவிக்க விரும்புகிறேன். கூடுதல் வரி என்று வழங்கப்படுவது குறித்து நான் குறிப்பிடுகிறேன். இது ஒரு கட்டணமாக இருக்குமா என்பதை அரசாங்கம் சிந்திக்கவேண்டும். ஃபீஸ் என்பது கட்டணமாக அமைவதாகும். தீர்வை அல்லது வரி என்று சொன்னுல் கட்டாயமாகச் செலுத்தவேண்டிய ஒன்ருக அமைந்து விடுகிறது. கட்டணமாக இருக்குமானுல், புதிய நீர் வசதிகளை அந்தந்த வட்டார மக்களுக்குச் செய்யமுடிந்த அளவுக்கு அந்த வசதி அவர்களுக்குக் கிடைப்பதை ஒட்டி நீரின்மீது கட்டணம் பெறவேண்டுமென்ற நியதியை ஏற்று வரியிலிருந்தும் விலக்குக்காட்ட வேண்டியது அவசியமானுல் அதைச் செய்வதற்கு ஏற்ப கட்டணமாக இதை வசூலிக்க முடியுமா என்பதை அரசாங்கம் ஆலோசிக்கவேண்டும். ஏற்கனவே விதிக்கப்பட்ட தீர்வை பின்னுல் வரியாக நிரந்தரமாகச் செலுத்தப்படும் ஒன்ருக வளர்ந்து வருகிறது என்று சொல்லப்படும்போது, வருகிற புதிய கட்டணம் விவசாயிகளிடமிருந்து பெற முயற்சிக்கும்போது அது நிலைபெற்றுப்போனுல் மாறுதல் இன்றி கட்டாயமாக வசூலிக்கப்படும் வரியாக மாறும் நிலை இருக்குமாகையால், சட்ட முறைப்படி எதிர்க்கட்சித் துணைத் தலைவர் அவர்கள் 'டாக்ஸ்' என்ற பெயரில் அது இடம் பெறக்கூடாது என்று தெரிவித்தார்கள். ஃபீஸ் என்று இருக்க வேண்டுமென்று சொன்னுர். செய்யப்படுகின்ற நீர், நில வசதிகள் யாருக்கேனும் கிடைக்காமல் போனுல், அவர்களுக்கும் கட்டணம் கட்டாயமாக ஆக்கப்படாமல் யாருக்குப் புதிய திட்டத்தினுல் நன்மை கிடைக்கிறதோ, அவர்கள் மட்டும் இதனை செலுத்தக் கூடியதாக ஆக்குவதற்கு வழி செய்ய முடியுமானுல், பொது மக்களுக்குக் கூட இந்த வரி அனைவரையும் பாதிக்கவில்லை என்ற மகிழ்ச்சி ஏற்படுமென்று கருதுகிறேன். மற்ற வகையில் இங்கே விதிக்கப்பட இருக்கிற கட்டண அளவுகள் பொதுவாக விவசாயத்தில் ஈடுபட்ட மக்களுக்கு சற்று அதிகமாக இருக்கிறது என்று கருதப்படுவது பலவகையிலும் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. அதிகமாக வரி கூட்டப்படுகிறது என்ற கருத்து நிச்சயமாக மாற்றப்படவேண்டும். ஐம்பது சதவீதம் 70 சதவீதம் என்று இருக்கிற இந்த விகிதத்திலிருந்து குறைக்கப்படவேண்டும் என்ற பொதுவான கருத்து, தனித்தனி பகுதிகளாக தரப்பட்டிருக்கிற திருத்தங்கள் மூலமாக இந்த அவையில் தனியாக ஆராயப்பட இருக்கிறது. பொதுவாக நான் வற்புறுத்த விரும்புவது, இது வரியாக இல்லாமல் கட்டணமாக ஏற்கப்படவேண்டும் என்பதும், குறைந்த நிலம் உள்ளவர்களுக்கு இந்தக் கூடுதல் வரியால் பாதகம் ஏற்படாமல் தடுக்க வழிசெய்ய வேண்டும் என்பதும், இப்போது விதிக்கப்பட இருக்கும் வரி அளவானது குறைக்கப்படவேண்டும் என்பதும் ஆகும். அமைச்சர்களால் இவை ஆழ்ந்து கவனிக்கப்படவேண்டும் என்று வேண்டிக்கொண்டு என் உரையை முடிக்கிறேன். 4–20 p.m.

(Deputy Chairman in the Chair.)

*கனம் திரு. ஆர். வெங்கடராமன்: உதவி சேர்மென் அவர்களே, கனம் எதிர்க்கட்சி உபதலைவர் ஸ்ரீ பாலசுப்பிரமணிய ஐயர்

கூறிய வாதத்துக்கு மாத்திரம் நான் பதில் சொல்ல முன் வந்திருக்கிறேன். பொதுவான பிரச்னைகளைப்பற்றி என்னுடைய சக அமைச்சராகிய ரெவின்யூ அமைச்சர் அவர்கள் விளக்கம் கூறுவார்கள்.

கனம் பாலசுப்பிரமணிய ஐயர் அவர்கள் இந்தத் தண்ணீர் தீர்வையைப் பற்றி குறிப்பிடும் போது, தண்ணீர் தீர்வை (Water cess) என்பது ஒரு 'Fee' அதாவது 'கட்டணம்' தான்; இது 'Tax' ஆக (வரியாக) இருந்ததில்லை, இருக்கவும் கூடாது என்று வாதாடினர். அவருடைய வாதத்தின் கருத்து என்னவென்றல், 'கட்டணமாக' இருந்தால், எந்த அளவுக்கு நீர்ப்பாசனத் திட்டத்துக்கு செலவு செய்யப்பட்டதோ, அந்தத் தொகையை வசூலிக்கு மளவுக்குத்தான் தீர்வை விதிக்க முடியும். வரியாக இருந்தால், நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு எவ்வளவு செலவு செய்யப்பட்ட போதிலும் கூட, எந்த அளவு வரையில் மக்களால் தாங்க முடியுமோ, அந்த அளவுக்கு வரியாக வசூலிக்க முடியும். ஆகவே கனம் பாலசுப்பிரமணிய ஐயர் அவர்கள் வற்புறுத்தியது என்னவென்றல், இதைக் கட்டணமாக வைத்து, ஒவ்வொரு நீர்ப்பாசன வசதிக்காகவும் எவ்வளவு தொகை செலவழிக்கப் பட்டதோ, அந்தத் தொகையளவு திரும்பக் கிடைக்கும்படியாக நாம் தீர்வையை விதிக்கவேண்டுமென்று தெரிவித்தார்கள். அதற்கு மேற்கோளாக அவர்கள் Irrigation Cess Act-ல் அவ்விதம் தான சொல்லப்பட்டிருக்கிறது என்று எடுத்துக் காட்டினர்கள் இந்தச் சட்டத்தின் சரித்திரத்தை நாம் படித்தோமேயானல், நமக்குச் சில விஷயங்கள் நன்ருகப் புலப்படும். 1864-ம் வருஷத்தில் இந்த Irrigation cess சட்டத்தை முதலில் நிறைவேற்றிய போது, கனம் பாலசுப்பிரமணிய ஐயர் அவர்கள் தெரிவித்த ஷரத்து அதில் இல்லை.

"For the avoidance of doubt it is hereby declared that water-cess leviable under this Act is not a tax on land but is a fee for the water supplied or used for the irrigation of land."

என்ற சொல் அப்போது இல்லை. இது 1945-ம் வருஷத்தில் தான் சேர்க்கப்பட்டது. 1864-ல் சட்டம் நிறைவேற்றப்பட்டபோது கூட, சில நிலங்களுக்கு ஏற்கனவேயே நீர்ப்பாசன வசதிகளெல்லாம் இருந்தன. அதற்குப் பிறகு அப்போதிருந்த சர்க்கார் புதிய நீர்ப்பாசனத் திட்டங்களைக் கொண்டு வந்தார்கள். புதிய நீர்ப்பாசனத் திட்டங்களைக் கொண்டு வந்தால், அதற்குத் தீர்வை விதிககலாமா, விதிக்கக்கூடாதா என்ற சந்தேகம் ஏற்பட்டது. Ryotwari Settlement செய்து விட்டால், அந்த செட்டில் மெண்டிலேயே தண்ணீர் தீர்வையும் சேர்ந்திருக்கிறது என்ற காரணத்தால், புதிதாக ஏதாவது நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றினல் கூட, Ryotwari Settlement-ல் முன்னல் சேர்ந்திருக்கிறது என்ற காரணத்தைக் காட்டி தண்ணீர் தீர்வை புதிதாக விதிக்கக்கூடாது என்று அன்றிருந்த சட்டத்திலேயே எடுத்துக்

28th February 1963] [திரு. ஆர். வெங்கடராமன்]

காட்ட முடியும். அந்த விதமாக சென்னை ஹைக்கோர்ட்டில் வாதாடப்பட்டது. 1942-ல் ஹைக்கோர்ட்டில் நடந்த கேஸில் தீர்ப்பு என்ன கொடுத்தார்கள் என்றால் :

I am reading the head-notes ...........

**" The water-cess levied under the Madras Irrigation Cess Act of 1865 is in the nature of a land tax. Accordingly where under the grant or treaty no land tax is leviable in respect of certain land, Government have no power to levy water-cess whether it be in respect of first or second crop."**

அதாவது சர்க்கார் ஏதாவது ஒரு நிலத்துக்கு வரி கிடையாது என்று சொல்லிவிட்டால், பின்னல் எவ்வளவு கோடிக்கணக்கான ரூபாய் செலவழித்து நீர்ப்பாசன வசதி செய்தாலும், அதற்கு வரி வசூல் செய்யக்கூடாது என்பதுதான் 1865-ம் வருஷத்திய சட்டத்தின் அடிப்படை. இந்த கேஸில் அவர்கள் தெரிவித்தது என்ன என்பதைப் படிக்க விரும்புகிறேன்.

" A charge for water supply for the purpose of cultivation is a charge on land. The Madras Irrigation Cess Act levies the cess on land. I Iam now reading from M.L.J. 2 1942 page 150. In delivering the judgment of the Privy Council " in *Kandakuri Balasurya Prasada Row* v. *The Secretary of State for India in Council*, in which the appellants sought to recover from the Secretary of State for India, sums paid under protest in respect of water-cess levied under the Act of 1865, LORD PARKER OF WADDINGTON said that the cess under the Act is leviable on land which is irrigated and therefore is in the nature of a land tax. In view of this judgment there can be no doubt that the exemption certificate applies to water-cess, it being a form of land tax ".

அந்த விதமாக வாதாட முடியும் என்ற நிலைமை ஏற்பட்டதால், 1942-ம் வருஷத்திய தீர்ப்பை மாற்றுவதற்கு 1946-ம் வருஷத்தில் இந்த ஷரத்தைப் போட்டோம். இந்த ஷரத்து என்னவென்றால் புதிதாக எந்த நீர்ப்பாசன வசதிகள் செய்தாலும், அந்த செலவுத் தொகையை ஈடுகட்டும் அளவுக்குப் பணம் வசூல் செய்ய **Cess** ஆக வசூலிக்க முடியும்; இது **land-tax** என்று கருதி இதற்கு மேல் கொடுக்க முடியாது என்று சொல்லக்கூடாது என்ற கருத்தைப் போட்டோம். இன்று இதை ஏன் மாற்றுகிறோம் என்றால், நாட்டிலே ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பு சில நீர்ப்பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. நூற்றுக்கணக்கான வருஷங்களுக்கு முன்பு சில நீர்ப்பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. பத்து வருஷங்களுக்கு முன்பு சில நீர்ப்பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. ஆயிரக்கணக்கான வருஷத்துக்கு முன்னல் நிறைவேற்றப்பட்ட நீர்ப்பாசனத் திட்டங்களால் Revenue Assessment செய்த இடத்தில் அவர்களுக்கு என்ன லாபம் வந்தாலும் தண்ணீர் தீர்வை போடக்கூடாது. நூறு வருஷங்களுக்கு முன்பு இடைக்காலத்தில் நிறைவேற்றப்பட்டதாக இருந்தால், அந்தக் காலத்தில்

[திரு. ஆர். வெங்கடராமன்] [28th February 1963

அதற்கு எவ்வளவு செலவழித்தார்களோ அதையொட்டி **Water Cess** போட வேண்டும். பத்து, 15 ஆண்டுகளாக கோடிக்கணக்கான ரூபாய் செலவழித்து நிலத்திற்கெல்லாம் நீர்ப்பாசன வசதி கொடுத்திருக்கிறோமே, இவர்கள் தலையில் எல்லா கோடி ரூபாய் செலவும் விழும். இது நியாயமா என்பதுதான்—இன்றைக்கு பிரச்னை **'Haves' and 'Havenots'** -க்கு இடையில் நீண்ட காலமாக இருந்துவரும் பிரச்னைதான் இது. உடையவர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்றால், "இல்லாதவர்களுக்கு இந்தச் சலுகையை விஸ்தரித்துக் கொடுக்க வேண்டாம்; எங்களுக்கு இருக்கிற உடமை எங்களோடு இருக்கட்டும், புதிதாக வந்தவர்கள் தான் புதிய வரி பளுவை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று சொல்லுகிறார்கள். இது நீர்ப்பாசன விஷயத்தில் மாத்திரம் ஏற்படுகிறது என்பது அல்ல; மின்சாரத்தில் இந்தத் தொல்லை ஏற்படுகிறது. பைகாரா, மேட்டூர் டாம், இவற்றின் **Electricity rate** பிரகாரம் கணக்குப் போட்டால், அவர்களுக்கு மின்சாரம் ஒரு நயா பைசா **(1 nP.) rate**-க்கு நாம் கொடுக்கவேண்டும் இப்போது நெய்வேலி தெர்மல் ஸ்டேஷனிலிருந்து மின்சாரம் கொடுக்க வேண்டுமென்றால், 6 நயா பைசாவுக்குக் கொடுக்க வேண்டும். இது நியாயமா; இது தான் நீர்ப்பாசனத்தைப் பொறுத்த அளவுக்கு இருக்கிற பிரச்னை. சர்க்கார் அதற்காக என்ன செய்கிறார்கள் என்றால், மொத்தமாக எல்லா நீர்ப்பாசன வசதிகளுக்கும் எவ்வளவு செலவாகியிருக்கிறது என்று கணக்குப் போட்டு, அதை நியாயமான முறையில் **(equitable manner)** நீர்ப்பாசன வசதி பெற்றுள்ள எல்லோரும் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று இந்த மாறுதலைச் செய்கிறோம். இந்த மாறுதல் செய்தால்தான் நீண்டகாலமாக நீர்ப்பாசன வசதி பெற்றவர்கள் அதிகமாகக் கொடுக்க முடியும்; புதிதாக நீர்ப்பாசன வசதி பெற்றவர்கள் சற்று குறைவாகக் கொடுக்க முடியும். அதைச் செய்யத் தான் இந்தத் திருத்தம் அவசியமாகிறது. இன்னும் பண்டைக்கால நீர்ப்பாசன வசதிகளில்கூட, செலவு அப்படியே நின்றுவிடவில்லை. இன்றைக்கு பாதுகாப்பு, பராமரிப்பு, அதற்கு வேண்டிய உத்தியோகஸ்தர்களுக்குச் செலவு இன்னும் பலவிதமான துறைகளில் செலவுகள் அதிகரித்துக் கொண்டு வருகிறது. **Irrigation sources**- ஐ ஒவ்வொன்றாக எடுத்து, ஒவ்வொரு நீர்ப்பாசனத் திட்டமாக எடுத்து, ஒவ்வொன்றுக்கும் என்ன செலவாயிற்று, அதற்குக் கட்டணம் எவ்வளவு வசூல் செய்வது என்று ஒவ்வொன்றாகப்
4-30 p.m. போட வேண்டுமென்றால் ராஜ்யத்தில் எவ்வளவு விதமான நீர்த் தீர்வையை நாம் வசூல் செய்ய வேண்டுமென்பதை நீங்கள் எண்ணிப் பார்த்துக் கொள்ளலாம். ஆகவே நாம் செய்ய இருக்கும் திருத்தமானது நியாயமானது, சட்டத்துக்குப் புறம்பானதல்ல. பழைய திருத்தம் எதற்காக ஏற்பட்டது என்று தெரிந்து கொண்டால், இன்றைக்கு அதை மாற்றுவது எவ்வளவு அவசியம் என்பது தெரிகிறது. 1945-ம் வருஷத்திய திருத்தமானது அன்று நாம் புதிதாகச் செய்கின்ற நீர்ப்பாசன வசதிகளுக்கு தீர்வையை மாற்றவே முடியாது என்ற நிலைமையை உண்டாக்கியது. 1865-ல்

28th February 1963] [திரு. ஆர். வெங்கடராமன்]

இருந்தது போல் திருப்பிக் கொண்டுபோய், நியாயமான தண்ணீர் வசதி செய்யவேண்டுமென்பது தான் இந்தத் திருத்தம். இதை சபை ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகிறோம். மற்றபடி இந்த விவாதத்துக்குப் போதுமான பதில் கனம் ராமையா கொடுப்பார்கள்.

THE HON. SRI V. RAMAIAH : Mr. Deputy Chairman, Sir, for the benefit of the hon. lady Member sitting in front of me I shall just reply in English. My hon. colleague in trying to explain . . . . (Sri K. Balasubramanya Ayyar : He has explained in Tamil). The Hon. Leader of the House having explained the difficulty pointed out by the hon. Deputy Leader of the Opposition regarding the term ' tax ' and ' levy ', I shall now confine myself to the general aspect of this Bill before us. Well, Sir, this Bill has been considered on many occasions for over a year. When this measure was introduced for the first time during the last Budget, this was more or less fully discussed both in this House and in the other House. Again, there was an occasion when it was further discussed during the debate on the Governor's Address. More than that, this Bill has been carefully followed by many in this State who are interested in irrigation, and also it was carefully considered by the SelectCommittee in which hon. Members of this House were invited to be present. In the Select Commitee meetings the Bill was further considered and we arrived at certain decisions which have come out in the form of a Bill which is before the House now.

Now the hon. Member Sri K. Balasubramanya Ayyar, when he started speaking, was just giving a history of this Bill. He has made a deep study as far as the land tenure and irrigation are concerned. He was trying to present to us that the old irrigation sources from which the ryots were benefited for hundreds of years should be left more or less untouched. Well, by the way he presented his argument, many of us will be tempted to feel that we are doing something extraordinary or we are levying a high charge for traditional irrigation sources as such. This point was engaging my attention for quite some time. For I am not only in charge of land revenue but also irrigation. Now looking into the history of irrigation in this State, I would like to point out one thing to the hon. Deputy Leader of the Opposition who has put in a vehement plea that the old sources should not be taxed, because we have not incurred any additional expenditure. Well, in his reply the Leader of the House just now pointed out not only the difference between the terms ' tax ' and ' levy ', but he also went into the general question of how this necessity to impose an additional tax has been felt and how it has been introduced, by quoting the rates of electricity supply in the Electricity Board. He pointed out the cost of generation of electricity in projects like Mettur, Pykara and Papanasam. (Interruption by Sri K. Balasubramanya Ayyar.) I agree with Mr. Balasubramanya Ayyar. The cost of generation in Mettur, Pykara and Papanasam, he pointed

out, would come to one naya paisa per unit whereas the cost of generation from Kundah Hydro-electric Station, the Madras Thermal Station and also the Samayanallur Station would come to more or less 6 naya Paise. I am not quoting the rates in respect of the Neyveli Project. As far as the practice in the Electricity department is concerned, we do not seek to fix the rate with reference to each project as such. The whole thing is a common grid and the rates payable are also common. I would like here to point out as one not only in charge of revenue but also in charge of irrigation, that we are not making any such attempt at all. People using the water in the Cauvery Delta Irrigation System or any other old irrigation system have been paying a very much lower rate than the ryots who have benefited from the irrigation projects which have subsequently come into existence. If I give figures, I can convince the hon. Members that even the additional tax now proposed to be imposed will not come anywhere near the rate which is paid by the people who are benefited from projects like Lower Bhavani, Sathanur and also the latest project, the Parambikulam Aliyar Project. There is still a great difference between the tax payable under the new irrigation sources and the old ones.

DEPUTY CHAIRMAN : The Government are giving water only for dry crops.

THE HON. SRI V. RAMAIAH : The Deputy Chairman has reminded me that I am missing one important point. The charge per acre in respect of projects like Lower Bhavani, Sathanur or even Parambikulam Aliyar Project is very high and cannot compare with the tax payable by the ryots under the old irrigation systems like Cauvery Delta or Periyar System or even the Tambaraparani System.

4-40 p.m. As pointed out by Dr. Balasubramanya Ayyar . .

THE HON. SRI R. VENKATARAMAN : I wish he becomes and continues to be a doctor. Only we have no power to confer that title.

THE HON. SRI V. RAMAIAH : In my mind the hon. Member is already a doctor. Sri Balasubramanya Ayyar was just now saying that he had no objection if people who were going to be benefited for the first time were charged high. We have done it. Even after this additional levy, this assessment will not come anywhere near the assessment imposed on people benefited by new projects. Now, if we look into the irrigation systems in the Chingleput district, the latest system of irrigation is with the help of electricity. If you come to the charges which a ryot has to pay for irrigating an acre of land by power, it comes to more than Rs. 50 or so. But he does not grudge to pay because he knows he can get a good return. If all the plea is that the charges are going to be very heavy and that this additional levy cannot be withstood by the ryots, I am wondering how this demand for rural power has been

28th February 1963] [Sri V. Ramaiah]

increasing rapidly. By the end of this calendar year, I am told that in this State the ryots would be making use of about 160,000 pump-sets. The ryots are making use of these pump-sets in Coimbatore and Salem districts. I am not going into these details to justify the additional levy. Still we will have to keep in mind that background. There are great variations in the fee paid by the ryots who use the old sources of irrigation and those who use the new sources of irrigation. A heavy amount is paid by the ryots who come under the new projects. We have also to bear in mind that the old sources of irrigation are not left untouched. Every year we have to spend a great deal of money on their upkeep and maintenance. I got details worked out, not for the purpose of this Bill, but for information when I took over Irrigation. It was an astonishment to me as well as to those connected with irrigation itself to know how much we were spending every year on maintenance. In the Cauvery Delta System the cost of maintenance in the year 1933 was Rs. 5.36 lakhs; to-day it is Rs. 30 lakhs per year. In the recent Cauvery Mettur Project, in the year 1933 it was Rs. 1.39 lakhs and now it has gone up to Rs. 7.64 lakhs. Thus, if I go into the cost of maintenance of each project, I find that the cost has shot up four or five times. To my surprise and to the surprise of everybody we found that in calculations for the purpose of maintenance the Finance Department itself had allowed a lump-sum approach by saying that we could spend four times the cost in the year 1946. Then, again, if we go into special repairs, the cost will come to another 100 per cent more. I am just narrating all this to show that when we levy this additional fee, we are not doing it just for the purpose of raising revenue, but only with the view, as the Leader of the House pointed out, that the people who are benefited should rise to the occasion and pay something towards the cost which we are incurring year by year. We cannot just charge a heavy amount from one section of the ryots who get the benefit of new irrigation projects leaving out men who have been benefiting for centuries from old irrigation sources which have had to be maintained at a heavy cost. If I stop the maintenance of the traditional sources of irrigation and try to save the maintenance cost, the whole project will go out of order. Again, we have to bear in mind in this context the mind of the ryots. In those days there was an effort on the part of the agriculturists to have their own channels and their own mud tanks. But to-day the ryot wants water to be taken at Government cost right up to his field. This position exists not in the new project alone but also in the old projects. If I am not to touch the old irrigation system and if I am to content myself only with new irrigation projects, this State will definitely suffer because much has to be done not only by way of maintenance but also for further improvement. Unless we take it up as a big programme, we may not have better and more efficient irrigation. That is what we are trying to do. In the coming years the Thanjavur ryot has to be better provided. He has to get the water at the moment he wants it. The same thing should happen in respect of 4-50 p.m.

[Sri V. Ramaiah] [28th February 1963

all the old irrigation schemes also. Therefore in the coming years we have to concentrate more on perfecting the old irrigation systems. I asked a special Division to go into the problems of the Thanjavur ryot. From the preliminary report I got from them, I find that if we want to improve the irrigation system in Thanjavur district, we will have to spend ten to fifteen crores of rupees. Unless we undertake to do it, there is not going to be any benefit to them. There is no use of saying: 'Somehow I am getting water. I will get on. I am not going to pay more for the water'.

These are all the bigger problems we have to face. And the additional levy will be more or less an incentive to us to think in terms of improving the old irrigation sources.

The hon. Member Sri Balasubramanya Ayyar said that if the periodical settlement work had gone on as in the old days once in thirty years, the need for the present Bill would not be there. I know by resettlement we would have automatically got an increase of over Rs. 18 over the previous settlement rates. In some cases it might have been much more. But here just now, as was pointed out by the Hon. the Leader of the House, we are not trying to equalise the rates in the different systems. We are only trying to get something more towards the cost which we are incurring year after year in the maintenance of the sources of irrigation. Because we were concentrating on many other activities and because the resettlement had not taken place, it is not just to say that the ryot should not pay anything towards these increased maintenance charges. If the resettlement had taken place, we would have easily got the extra money which we want for this purpose.

Sir, as regards the need for bringing in this measure, the Hon. the Finance Minister had dealt with it on various occasions both in this House and in the other House. I need not, therefore, go into the same ground again. This was brought in during the last Budget session definitely with the intention of getting more money to fulfil our Plan projects. Later on a much more serious situation arose on account of the Chinese aggression. I am, therefore, sure hon. Members would appreciate that the need for such a measure at this juncture is still greater than it was when it was first introduced. Our object is to spend whatever money we get in fulfilling the Plan targets and projects. I am, therefore, sure hon. Members would properly appreciate our intention and accept the Bill as a whole.

A number of other points were raised by the hon. Members. The hon. Member Sri Subbiah Chettiar said that the time we had chosen to impose this levy was not opportune because the prices of agricultural commodities were falling and so the additional levy would seriously affect the ryots. That point had been considered by the Select Committee. When we introduced the measure for the first time, we thought that the ryots would be able to stand a levy of 60 to 40 per cent. Considering the present position, we

28th February 1963] [Sri V. Ramaiah]

have brought it down to 40 to 35 per cent. The interest of the ryots had been constantly kept in view. It is nobody's intention to crush the ryots as such. We know their capacity and we know also the extent to which they can bear the burden. It is not our intention to crush them out of existence, through this measure.

There are a number of amendments given notice of by Members which will come up for discussion. Many relate to bringing down the rates. I am sure the hon. Member Sri K. Balasubramanya Iyer will move them and also put forth his points forcefully in order to convince us. Then at that time I will try to explain the Government's case. I cannot convince him but I will try to tion). Anyway I must accept I have not got the power to convince
tion). Anyway I must accept I have not got the power to convince
him. Before he ended his speech, he said his only concern was clause 21 and he was prepared to concede all the other clauses. So, I would request him first to concede all the other clauses and lastly we will take up clause 21. The reply to the points to be made by the hon. Member will again have to come from the Hon. Minister in charge of Law. I will leave it to lawyers to fight it out.

Now, I request the House to take the Bill into consideration.

DEPUTY CHAIRMAN: The question is—

'That the Madras Additional Assessment and Additional Water-cess Bill, 1963 (L.A. Biil No. 4 of 1963), as passed by the Asssembly, be taken into consideration'.

The motion was put and carried.

DEPUTY CHAIRMAN: The House will now adjourn and meet again at 3 p.m. to-morrow.

The House then adjourned.

## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

* 100. *Notification issued with G.O. Ms. No. 2398, Public (General-M), dated 17th December 1962 regarding introduction of Tamil in certain offices of the Public Health, Animal Husbandry, Education, Jail and Women's Welfare Departments with effect on and from 1st January 1963.*

* 101. *Notification issued with G.O. Ms. No. 4162, Home, dated 4th December 1962 regarding collection of tax at reduced rate in respect of Lorry M.D.J. 1623 belonging to Salesian Sisters' Society, Auxilium College, Katpadi, for a period of three years from 1st July 1962.*

* 102. *Notification issued with G.O. Ms. No. 43, Home, dated 4th January 1963 regarding extension of grace time for payment of tax for fourth quarter of 1962-63 in respect of stage carriages and public carriers.*